

3. அதில் முத்து தோற்றான்; தன்னுடைய படப் புத்தகத்தை இழந்தான். பாலன் 'தனக்கு நல்ல புத்தகம் கிடைத்தது' என்று சந்தோஷத்தோடு வீடு சென்றான். முத்து தனக்கு நேர்ந்த நஷ்டத்தை நினைத்து விசனப்பட்டான்; அழுது கொண்டே வீடு வந்து சேர்ந்தான்.

தகப்பனார்:—"முத்து! ஏன் அழுகிறாய்?" என்று கேட்டார்.

முத்து:—"பாலன் என்னை அடித்து, என் படப் புத்தகத்தைப் பறித்துக்கொண்டான்" என்றான்.

தகப்பனார்:-"பாலா! முத்துவின் புத்தகத்தை ஏன் பறித்துக் கொண்டாய்?" என்று விசாரித்தார்.

பாலன்:- "நானும், முத்துவும் பந்தயம் வைத்து விளையாடினேம். முத்து தோற்ருன். அத ஞல் படப்புத்தகம் எனக்குக் கிடைத்தது. நான் அதைப் பறித்துக்கொள்ள வில்லை" என்று சொன்னுன்.

4. முத்து, தன் குற்றத்தை ஒப்புக் கொள்ள வில்லை; மறுபடியும் பொய்யே சொன்னுன். தகப் பனுர், முத்துவைக் கோபித்து அடித்தார்.

5. அதன் பின் வேலன் என்ற ஒரு துஷ்டப் பையனேடு முத்து சேர்ந்தான். ஒரு நாள் அவ னேடு பந்து விளையாடினுன். இருவருக்கும் சண்டைவந்து, முத்துவை வேலன் கீழே தள்ளி ஞன். முத்து விழுந்தான். அவன் கைமுறிந்தது. அவனுடைய பந்தையும் வேலன் பறித்துக் கொண்டு ஓடிவிட்டான்.

6. முத்து அழுதுகொண்டு வீடுவந்து சேர்ந் தான். அவன் தாயார் தகப்பனுரிடம் தெரிவித் தான். அவன் பொய் சொல்வது வழக்கம் என்று அவர்கள் அதை நம்பவில்லை. முத்து பல நாள் கஷ்டப்பட்டான். பின்னுல் புத்தி வந்தது.

ஆகையால் பிள்ளைகளே! பொய் சொல்லக் கூடாது. பொய்யன் மெய் சொன்னுலும் ஒரு வரும் அவன் சொல்லை நம்பமாட்டார்கள்.

## 30] சுத்தம் சுகம் தரும் [கூய

1. ஒரு ஊரில் கம்பன், வம்பன் என்ற இருவர் இருந்தனர். கம்பன் மிகவும் புத்திசாலி; சௌக்கிய முள்ளவன்; பலசாலி; படிப்பில் கெட்டிக்காரன். வம்பன் புத்தியில்லாதவன். அவன் நோயாளி; பலமில்லாதவன். நீங்கள் நோயாளி ஆகாமல் கம்பனைப் போலவே புத்திசாலியாய் இருக்க வேண்டுமானால் கீழே சொல்லியபடி நடந்து கொள்ளவேண்டும்.

2. காற்று:- எப்பொழுதும் நல்ல காற்று அடிக்கும் இடங்களிலேயே இருக்கவேண்டும். குப்பை மேடு, சாக்கடை முதலிய அசுத்தமான இடங்களில் போகலாகாது. அவைகளுக்குச் சமீபமான இடங்களில் விளையாடக் கூடாது. அந்த இடங்களில் உள்ள காற்று அசுத்தமானது. ஆதலால் அது வியாதிகளை உண்டுபண்ணும்.

3. சாப்பாடு:- பசி உண்டான போது தான் சாப்பிட வேண்டும். பசியாதபோது தின்பண்டங்களில் ஆசை வைத்து அடிக்கடி சாப்பிடல் கூடாது. நன்றாய் வேகாத ஆகாரத்தையும் சரியாய்ப் பழுக்காத பழங்களையும், அழுகியபழங்களையும் தின்னலாகாது. இவைகள் சரியாய் ஜீரணம் ஆகா; வயிற்றுவலி, வாந்தி முதலிய அநேக வியாதிகளை உண்டாக்கும்.

4. வஸ்திரம்:- நீங்கள் கட்டிக் கொள்ளும் வேஷ்டியும், போட்டுக் கொள்ளும் சட்டையும் சுத்தமாயிருக்க வேண்டும்; அசுத்தமான தரையில் உட்காரக் கூடாது; அழுக்கு வஸ்திரங்களைக் கட்டலாகாது. அவைகளில் உள்ள அழுக்குகள் உங்கள் தேகத்தில் சேர்ந்து, சிரங்கு முதலிய பல வியாதிகளை உண்டாக்கும்.

5. குளித்தல்:- தினந்தோறும் சுத்த ஜலத்தில் குளிக்க வேண்டும். அப்படிச் செய்யாவிட்டால் தேகத்தில் உள்ள அழுக்குகள் மயிர்த் துவாரங்களை மூடிக் கொள்ளும். வியர்வை நீர் வெளி வராமல் வியாதியை உண்டு பண்ணும்.

6. சனிக்கிழமை, புதன்கிழமை எண்ணெய் நீராட வேண்டும். தலைக்கு எண்ணெய் தடவிச் சீப்பால் வாரிக்கொள்ள வேண்டும். இவைகளால் தலையில் பேன் தங்காது. காற்றடித்து அடைந்திருக்கும் தூசி, புழுதி முதலியவை தலையை விட்டு நீங்கிவிடும். அப்படிச் செய்யாவிடில் தலை மயிரில் சிக்குப்படும். பொடுகு முதலிய சிரங்குகள் தலையில் வெடிக்கும்.

ஆதலால் சிறு வயதில் இருந்தே மேலே சொன்ன விதமாக நடந்து வந்தால் கம்பனைப் போல நல்ல சுகம் பெறலாம். தேக பலமும், கல்வியில் தேர்ச்சியும் அடையலாம்.

பிள்ளைகளே, இதனால் 'புத்திமான் பலவான் ஆவான்' என்பதை அறியலாம்.



## 31] எலி. [௩௧

1. சிறுவர்களே! இது ஒரு எலி. இது நமது வீட்டிலுள்ள வஸ்துக்களைப் பாழாக்கி விடுகிறது. எலி சுவர்களிலும், தரையிலும் வளை தோண்டி, அதில் குடியிருக்கும்.

2. இதன் உடம்பில் மிருதுவான மயிர் அடர்ந்து இருக்கிறது. தடவிப் பார்த்தால் மழ மழ என்று இருக்கும். பூனைக்கு இருப்பது போல் எலிக்கும் மீசை மயிர் உண்டு. இதன் நகங்கள் கூர்மையாய் இருக்கும். ஆகையால் இது சுவரின் மேல் வெகு இலகுவாய் ஏறும். இதற்கு இரவில் கண் நன்றாய்த் தெரியும்.

3. எலிக்குக் கூர்மையான பற்கள் உண்டு. இது துணி முதலியவற்றைக் கடித்துவிடும். இதற்கு வட்டமான காதுகள் உண்டு, இது மெதுவான சத்தத்தையும் நன்ருய்க் கேட்கும்.

4. சுண்டெலி, வெள்ளெலி, முள்ளெலி, மூஞ்சூறு, பெருச்சாளி என்பவைகளும் எலி இனத்தைச் சேர்ந்தவைகளே.

5. வீட்டில் வசிக்கும் எலிகள், நெல், மிளகாய், தின் பண்டங்கள் முதலியவற்றைத் திருடும். வயலில் இருக்கும் எலிகள் வரப்புப் பொந்துகளில் தானியங்களைச் சேகரித்து வைக்கும். மனிதர் சாப்பிடும் எல்லா ஆகாரங்களையும் எலி தின்னும்.

6. எலி வீட்டில் பண்டங்களைக் கடித்து, நாசம் செய்யாமல் இருப்பதற்காகச் சிலர் பூனையை வளர்க்கிருர்கள். பூனையைக் கண்டால் எலிக்குப் பயம். பூனை வளருகிற வீட்டை விட்டு எலிகள் அடுத்த வீட்டுக்குப் போய்விடும். பூனை இல்லாத வீடுகளில் எலிப்பொறி வைத்து, எலியைப் பிடிப்பார்கள்.



7. இது ஒரு வகை எலிப் பொறி. இதில் அகப்பட்ட எலி ஓட முடியாது. உயிருடனே இருக்கும். பிறகு வீட்டுக்காரன் அதைக் கொன்று விடுவான்.



இது மற்ருெரு வகை எலிப் பொறி. இதில் அகப்பட்ட எலி உடனே இறந்து விடும்,

8. பிள்ளைகளே! திருடுவதால் எப்பொழுதும் இவ்விதம் துன்பம் உண்டாகும். சில சமயங்களில் உயிருக்கும் கேடு நேரிடும்.

---

## 32] மதிகெட்ட காக்கை. [௩௨

*"வாசுதேவனே" என்ற பாடலின் சந்தம்*

கும்பல் கும்பலாய்ப்-பெரும் கூட்டம் கூட்டமாய்ச்
செம்மறி யாடு பல சேர்ந்து மேய்ந்தது. (1)

கழுகு அவைகளில் ஒன்றைக் காலில் இடுக்கியே
பழுவுடன் தூக்கி மேலே பறந்து சென்றது. (2)

சென்றதைக் கண்ட ஒரு சிறிய காக்கையும்
இன்று நாமோரு ஆட்டை எடுப்போ மென்றெண்ணி, (3)

அருகில் பறந்துபோய் ஒரு ஆட்டின் முதுகிலே
இருந்து கொண்டதைக் காலால் இடுக்கிப் பார்த்தது. (4)

சுருட்டை மயிர்களில் கால்கள் சொருகிக்கொள்ளவே
உருட்டி உருட்டியே பார்த்து ஒன்றும் முடியாமல் (5)



விடவிடத்துப் போய்ச் சிறகை வீசி வீசியே
படபட வென்று அடித்துப் பறக்க முயன்றது. (6)

அந்தச் சத்தத்தைக் கேட்டு ஆட்டுக்காரனும்
வந்து காக்கையைப் பிடித்து மகிழ்ச்சியாகவே, (7)

தன் மகன் கையில் கொண்டு தந்திட அவன்
'என்ன அதிசயம்! இது ஏதெனக்' கென்றான். (8)

'கழுகு செய்ததைத் தானும் கருதிச் செய்ததால்
பழுதடைந்தது மகனே பார்' என்று சொன்னான். (9)

எந்தக் காரியம் செய்ய எண்ணினாலுமே
சொந்தப் பலத்தையே கருதித் துணியவேணுமே. (10)

## 33] சங்கரன். [௩௩

1. செல்லூர் என்ற கிராமத்தில் சங்கரன் என்ற ஒரு சிறுவன் இருந்தான். அவன் ஒரு துஷ்டப் பையன்; தாயார் தகப்பனருக்கு அடங்காதவன்; தன் இஷ்டப்படியே திரிவான்.

2. ஒரு நாள் அவன் சில பிள்ளைகளோடு வீதியில் விளையாடினன். அப்பொழுது மாலை நேரம். அவ்வழியில் ஒருவன் ஒரு குதிரையை ஓட்டிக்கொண்டு போனன். சங்கரன் பார்த்தான். குதிரையின் வாலைப்பிடிக்க நினைத்தான். அதன் காலின்பக்கம் நெருங்கி வேடிக்கையாக ஓடினன்.

3. குதிரைக்காரன் பார்த்தான். பையனைக் கூப்பிட்டான்; "தம்பி! குதிரை உதைக்கும். தூரப் போய்விடு" என்று சொன்னன். சங்கரன் "எனக்குக் கால் இல்லையோ" என்று துடுக்காய்ப் பதில் சொன்னன். குதிரைக்காரன் பல தட்வை சொல்லியும் சங்கரன் கேட்கவில்லை.

4. சங்கரன் சமீபத்தில் நெருங்கி வருவது குதிரைக்குத் தெரிந்தது. அது தன் காலைத் தூக்கிப் படீர் என்று ஒரு உதை உதைத்தது. உதை சங்கரன் முகத்தில் பட்டது. சங்கரன் முன் பற்கள் நான்கு உதிர்ந்து விட்டன. உடனே மயங்கித் தரையில் விழுந்தான். அவன் தாய் தந்தையர்

அறிந்தார்கள். அவனுக்குச் சிகிச்சை செய்தார்கள். அவன் பல நாள் கஷ்டப்பட்டுச் சவுக்கியமடைந்தான்; அவன் பிழைத்ததே அரிதாயிற்று.

5. அது முதல் சங்கரனைப் பார்த்தவர்கள் எல்லோரும் 'ஒட்டைப் பல் சங்கரா! ஒட்டைப் பல் சங்கரா!' என்று கூப்பிட்டார்கள். வயது ஆக ஆக அவனுக்கு வெட்கம் அதிகரித்தது. அவன் தன் தகப்பனாரிடம் சொன்னான். அவர் வைத்தியர் மூலம் அவனுக்குப் புதுப் பற்கள் கட்டி வைத்தார். அதன் பின்னும் அவனுடைய துஷ்டத்தனம் அடங்கவில்லை.

6. அவன் 'தன்னைப் பரிகாசம் செய்தவர்கள் அறிய வேண்டும்' என்று நினைத்தான். கடை வீதிக்குச் சென்றான். ஒவ்வொரு கடையிலும் "இஞ்சி இருக்கிறதா இஞ்சி" என்று பல்லைக் காட்டிக்கொண்டே போனான்; வாங்கவில்லை.

7. ஒரு கடைக்காரன் இந்தச் சங்கதியை அறிந்தான்; கோபமாய் இவன் கன்னத்தில் ஒரு அறை அறைந்தான் கட்டிய பற்கள் கீழே விழுந்து விட்டன. ஆகையால் இவன் முன்னிலும் அதிக வெட்கம் அடைந்தான்.

பிள்ளைகளே! சங்கரன் கதியைப் பார்த்தீர்களா! நீங்களும் துஷ்டத்தனம் செய்தால் சங்கரனைப் போலவே கஷ்டம் அடைவீர்கள்.



84] **பல்லி.** [க.௬

1. பல்லி சாதாரணமாக நமது வீடுகளிலும் மரங்களிலும் வசிக்கும். இது சாதுவானது.

2. பல்லியின் நிறம் அது வசிக்கும் இடத்திற்குத் தக்கதாய் இருக்கும். அதன் உடம்பு நீண்டு மெலிந்து இருக்கும். அதன் தோல் இலேசானது. அதில் உரோமங்களாவது இறகுகளாவது கிடையாது. சிலவேளைகளில் பல்லியின் வயிற்றிலுள்ள முட்டை வெளியில் தெரியும்.

3. பல்லிக்கு நான்கு குறுகிய கால்கள் உண்டு. கால்கள் நான்கும் ஒரே அளவாய் இருக்கும். அதன் நுனியில் விரல்கள் உண்டு. இது தன் கால்களால் நகர்ந்து செல்லும்; கண்ணாடியின் மீதும் தலைகீழாய் ஓடும். நழுவி விழாதபடி அதன் பாதங்களில் சதைப் பற்றுகள் உண்டு.

4. பல்லியின் வால் நீண்டு இருக்கிறது. அது இலேசாய் அறுந்து போகக்கூடியது. சில வேளை அதற்கு அபாயம் நேரிடும்போது வாலை அறுத்துக்கொண்டு ஓடிப்போகும். அறுந்த வால் சிறிது நேரம்வரை துள்ளும். அறுந்த இடத்தில் மறுபடியும் வால் வளர்ந்துவிடும்.

5. பல்லியானது எறும்பு, ஈ, கொசு, ஈசல், சிறு பூச்சிகள் முதலியவற்றைப் பிடித்துத் தின்னும். அதன் வாயிற் பற்கள் இல்லை. ஆதலால் அது தன் ஆகாரத்தை மென்று தின்னாது. அவைகளை அது முழுமையாக விழுங்கும்.

6. பல்லி, மணல் குழிகளில் முட்டை இடும். அதன் முட்டை உருண்டை வடிவம், வெண்மை நிறம். அது தடவை ஒன்றுக்குப் பன்னிரண்டு முட்டைகள் வரை இடும். அம் முட்டைகளை அது அடைகாக்காது. சூரிய வெப்பத்தால் முட்டைகள் வெடித்துக் குஞ்சுகள் வெளிப்படும். குஞ்சு தாயைப்போலவே சிறிதாய் இருக்கும். தாய்ப் பல்லி தன் குஞ்சுகளைக் கவனிப்பதில்லை. குஞ்சு தானே இரைதேட ஆரம்பிக்கும்.

7. பல்லியின் மூத்திரம் அதிக காரமுள்ளது. அது நமது தேகத்தின் மீது பட்டால் பட்ட இடம் பொரிந்து விடும். ஆதலால் பல்லி நம் மேல் விழுந்தால் உடனே குளிக்க வேண்டும். பெரிய பல்லிக்குக் கௌளி என்று பெயர்.

## 35] உண்மை பேசிய பையன். [௩௫

### முதற் பாகம்.

மதுரையில் சோமநாதன் என்ற ஒரு பிரபு இருந்தார். அவருக்குத் தோட்டங்களும், பங்களாக்களும் அநேகம் இருந்தன. அவரிடம் அநேகர் வேலைபார்த்து வந்தார்கள். அவர்கள் 'சரியாய் வேலை செய்து வருகிருர்களா?' என்று வேலைக்காரர்களை அவர் அடிக்கடி விசாரிப்பார்.

ஒரு நாள் தோட்டக்காரன் அவர் வீட்டுக்கு வந்தான். பிரபு அவனைப் பார்த்து,

(" ஸ்ரீ ராமச் சந்திரனே " என்ற பாடலின் சந்தம்.)

நீ நமது தோட்டத்திலே நிதமும் சென்று செடிகளுக்கு
நீர்பாய்ச்சி வருகிருயா? சொல் சொல் சொல்
நேர்த்தியாய் மனப் பூர்த்தியாய்.

தோட்டக்காரா! நமது தோட்டத்தில் உள்ள பூச்செடிகள், மாங்கன்றுகள் நன்ருய் வளர்கின்றனவா? தண்ணீர்பாய்ச்சி வருகிருயா? களைகள் எடுத்து வருகிருயா? [என்று கேட்டார்]

தோட்டக்காரன்:— ஐயா!

நான் நமது தோட்டத்திலே நட்டுவைத்த மாங்கன்றுகள்
நான்கில் ஒன்று வாடினது மெய் மெய் மெய்
நட்டமாய் ஒன்று கெட்டது.

பூச்செடிகள் செழிப்பாய் இருக்கின்றன. மாங் கன்றுகள் நான்கு பயிர் செய்தேன். இரண்டு நன் ருய் வளர்கின்றன. ஒன்று பட்டுப்போயிற்று. மற் ருென்று வாடியிருக்கிறது. [என்று சொன்னுன்]

பிரபு:—தோட்டக்காரா!

என் அதனைக் கவனியாமல் இந்த விதமாய் இருந்தாய்?
இன்னுமிது போலிராமல் பார் பார் பார்
ஏற்றியே தினம் போற்றியே.

இரண்டு கன்றுகள் ஏன் கெட்டுப்போயின? நீ சரியாய்க் கவனிக்கவில்லை. செழிப்பான இரண்டு மாங்கன்றுகளையும் கவனித்துப் பார்.

தோ:—ஐயா! உத்தரவுப்படியே செய்கிறேன். [என்று சொல்லிவிட்டுப் போய்விட்டான்]

மறுநாள் விடுமுறை நாளாய் இருந்தது. பிரபுவின் குமாரன் ராமனைப் பார்க்க, அவன் சிநேகிதன் கிருஷ்ணன் வந்தான். இருவரும் சிறிது நேரம் பேசிக்கொண்டு இருந்தார்கள்.

ராமன்:—(கிருஷ்ணனைப் பார்த்து)

இன்று லீவு நாளதனுல் இருவரும் நம் தோட்டத்துக்கு
ஏகி வருவோம் கிருஷ்ணு! வா! வா! வா!
ஏகமாய் வெகு வேகமாய் (இ)

கிருஷ்ணு! இன்று நமக்கு லீவு நாள். நான் எங்கள் தோட்டத்துக்குப் போகிறேன். நீயும் வருகிருயா? அங்கே விளையாடலாம்.

கிருஷ்ணன்:—அன்புள்ள சிநேகிதனே! உன் மனம்போல் போய்வருவோம் வா!

இருவரும் புறப்பட்டுத் தோட்டம் வந்தார்கள்.

கிருஷ்ணன்—:(ராமனைப் பார்த்து) ராமா!

மதுரமான மாங்கனியும் மாதுளங் கோய்யாக்கனியும்
வாழையும் பலாக்கனியும் பார்! பார்! பார்!
மாட்சியே நல்ல காட்சியே.

தோட்டத்தில் செடிகள் வளர்ந்திருக்கும் செழிப்பும், கனிகள் பழுத்துத் தொங்கும் அழகும் எவ்வளவு நேர்த்தியாய் இருக்கிறது பார்! [என்று சந்தோஷமாய்ச் சுற்றிப் பார்த்தார்கள்]

ராமன்:—(கிருஷ்ணனைப்பார்த்து) கிருஷ்ணு!

இதில் இரண்டு மாங்கனியும் இதமுள்ள கோய்யாக்கனியும்
இச்சை யுடனே பறித்து நாம்! நாம்! நாம்!
இன்பமாய்ப் புசிப்போம் நண்பனே

கிரு:—ராமா! இந்த மாதுளம் செடியில் இரண்டு பழங்கள், கொய்யாச் செடியில் நான்கு பழங்கள் பறித்துவிட்டேன். இதோ தோட்டக்காரன் கத்தி இருக்கிறது. இதனுல் பழங்களை அறுத்துச் சாப்பிடுவோம். [என்ருன்]

இருவரும் பழங்களை அறுத்துச் சாப்பிட்டார்கள். கத்தி அறுக்கும் கூர்மையை ராமன் பார்த்தான்; கத்தியைக் கையில் எடுத்தான்; பக்கத்தில் இருந்த செடிகளின் சமீபத்தில் சென்றான்.

ராமன்:—(கிருஷ்ணனைப் பார்த்து) கிருஷ்ணா

கூர்மையுள்ள கத்தியிது கூட்டமான செடிகள்தனைக்
கூறுகூறாய் நறுக்குவதைப் பார்! பார்! பார்!
கூர்மையே கத்தி நேர்மையே.

இந்தக் கத்தி எவ்வளவு கூராய் இருக்கிறது! பார்த்தாயா? இது செடிகளை எவ்வளவு சீக்கிரம் நறுக்குகிறதுபார்.

[என்று சொல்லிக்கொண்டே சில செடிகளை நறுக்கி விளையாடினார்கள்.]

கிருஷ்ணன்:—(ராமனைப் பார்த்து) ராமா!

வெகுநேர மாய்விட்டதால் வீட்டுக்குநாம் போகவேணும்
வேகமாக ராமனேநீ வா! வா! வா!
விரைவுடன் செல்வோம் விரைவுடன்

நாம் இங்கே வந்து வெகு நேரம் ஆய் விட்டது; வீட்டுக்குப் போவோம் வா.

[இருவரும் வீட்டுக்குத் திரும்பி விட்டார்கள்.]



36] **உண்மை பேசிய பையன்** [ராக

இரண்டாம் பாகம்

பிரபு மறுநாள் தோட்டத்துக்குப் புறப்பட்டார்; ராமனையும் அழைத்துக்கொண்டு வந்தார்; தோட்டத்தைச் சுற்றிப் பார்த்தார். அங்கே சில செடிகள் வெட்டப்பட்டிருந்தன.

பிரபு:—(தோட்டக்காரனைப் பார்த்து)

எவரடா இச்செடிகள் தன்னை இப்படி அறுத்துவிட்டார்?
இங்கு காவல் செய்கிறாயோ பார்! பார்! பார்!
ஏற்குமோ முறை ஏற்குமோ?

தோட்டக்காரா! இந்தச் செடிகளை வெட்டினது யார்? இப்படித்தான் தோட்டத்தைப்பார்த்து வருகிறாயா? [என்று கோபமாய்க் கேட்டார்.]

தோட்டக்காரன்:—(நடுநடுங்கி) ஐயா!

எவரோவந்து செடிகள் தன்னை இந்தவிதம் நறுக்கிவிட்டார்
எனக்கெதிரில் செய்யவில்லை மெய். மெய். மெய்.
ஏதுமே தெரியாதையா.

நான் வெளியில் போயிருந்தபோது யாரோ வந்து இப்படிச் செய்திருக்கிறார்கள். இன்னார் என்று எனக்குத் தெரியவில்லை.

பிரபு:—தோட்டக்காரா!

உடன் அவரைக் கண்டுபிடித் தொப்பிவிக்காவிட்டாலிங்கு
உன்வேலை தொலைந்துபோகும் பார். பார். பார்.
ஓடடா! அவரைத் தேடடா!

உடனே நீ அவர்களைக் கண்டுபிடித்து என்னிடம் ஒப்புவிக்கவேண்டும்; இல்லாவிடில் உன்னை வேலையைவிட்டு நீக்கிவிடுவேன். இந்த மாதச் சம்பளத்தையும் பிடித்துவிடுவேன்.

தோட்டக்காரன்:—

ஐயா உத்தரவுப்படி யான்நடந்து கொள்ளுகிறேன்.
அன்பா யெனை மன்னிப்பீர் தாம். தாம். தாம்.
ஆதாரம் உங்கள் பாதாரம்.

ஐயா மன்னிக்க வேண்டும், உத்தரவுப்படி நடந்து கொள்கிறேன். [என்று சொல்லிப் போய்விட்டான். ராமன் நடந்த சங்கதிகளைக் கவனித்தான். அவன் தகப்பனாரிடம் நடந்த உண்மையைச் சொல்லிவிட நினைத்தான்.]

ராமன்:—[தகப்பனைப் பார்த்து] ஐயா!

நானே நேற்று வந்தேன் இங்கு நட்டிருந்த செடிகளையே
நறுக்கி விட்டேன் அறியாமலே மெய். மெய். மெய்.
நாடியே விளை யாடியே.

நேற்று இங்கு விளையாட வந்திருந்தேன்; அப்போது தோட்டக்காரன் இங்கு இல்லை; நான் அவனுடைய கத்தியை எடுத்தேன். அது கூர்மையாய் இருந்தது. நான்தான் இந்தச் செடிகளை வெட்டி விட்டேன். நான் அறியாமல் செய்த குற்றத்தை மன்னிக்க வேண்டும் என்று உண்மையைச் சொன்னான். பிரபுவுக்குத் தன் மகன் உண்மையைச்சொன்னதினால் சந்தோஷம் உண்டாயிற்று.

பிரபு:—[ராமனைப் பார்த்து] "கண்மணி! நீ செய்த குற்றம் பெரியது. மரம் வளருவதற்கு எத்தனை நாட்கள் செல்லும்? விளையாட்டாக வெட்டி விட்டாயே! வளர்ந்தால் எவ்வளவு பலன் தரும்! வளரும் வரை பாதுகாக்க வேண்டாமா? நீ உண்மை சொன்னதற்காகச் சந்தோஷம் அடைகிறேன். நீ செய்த பிழையை நான் மன்னிக்கிறேன். இனிமேல் நீ அப்படிச் செய்யாதே" என்று சொல்லி அவன் பேரில் அதிக பக்ஷமாய் இருந்தார்.

37] [௩௭

# விடுகதைகள்

1. செப்பு நிறைய முத்து. அது என்ன?
(மாதுளம் பழம்)

2. ஐந்து வீட்டுக்கு ஒரு முற்றம். அதுஎன்ன?
(உள்ளங்கை)

3. காலில்லாத பந்தல்
காணக் காண விநோதம். இது என்ன?
(வானம்)

4. ஊருக்கெல்லாம் ஒரு துப்பட்டி. இது என்ன?
(வானம்)

5. அடிமலர்ந்து நுனிமலராத பூ. என்ன பூ?
(வாழைப்பூ)

6. கைகள் உண்டு கால்கள் இல்லை;
வயிறு உண்டு குடல் இல்லை;
கழுத்து உண்டு தலை இல்லை. இது என்ன?
(சட்டை)

7. குடிக்கத் தண்ணீர் உண்டு; ஆனால்
குளிக்கத் தண்ணீர் இல்லை. இது என்ன?
(இளநீர்)

8. காடெல்லாம் சுற்றிவரும்;
கண்ட தண்ணீர் குடியாது. இது என்ன?
(செருப்பு)

9. ஓட்டமாய் ஓடும்; உருண்டு
உருண்டு ஓடும்; பள்ளத்தைக்
கண்டால் பாய்ந்து ஓடும். அது என்ன?
(தண்ணீர்)

# உலகநீதி

---

1. ஓதாமல் ஒரு நாளும்
இருக்க வேண்டாம்.
2. ஒருவரையும் பொல்லாங்கு
சொல்லவேண்டாம்.
3. மாதாவை ஒரு நாளும்
மறக்கவேண்டாம்.
4. வஞ்சனைகள் செய்வாரோ (டு)
இணங்கவேண்டாம்.
5. போகாத இடந்தனிலே
போகவேண்டாம்.
6. அஞ்சாமல் தனிவழியே
போகவேண்டாம்,
7. அடுத்தவரை ஒரு நாளும்
கெடுக்கவேண்டாம்.
8. தனம் தேடி உண்ணுமல்
புதைக்கவேண்டாம்.
9. தருமத்தை ஒரு நாளும்
மறக்கவேண்டாம்.
10. கொலைகளவு செய்வாரோ (டு)
இணங்கவேண்டாம்,
11. கற்றவரை ஒரு நாளும்
பழிக்கவேண்டாம்.
12. வார்த்தை சொல்வார் வாய் பார்த்துத்
திரியவேண்டாம்.

13. மதியாதார் தலைவாசல்
மிதிக்கவேண்டாம்.

14. மூத்தோர் சொல் வார்த்தை தனை
மறக்கவேண்டாம்.

15. முன்கோபக் காரரோ (டு)
இணங்கவேண்டாம்.

16. சேராத இடந்தனிலே
சேரவேண்டாம்.

17. செய்த நன்றி ஒரு நாளும்
மறக்கவேண்டாம்.

18. பிணையிட்டுத் துணைபோய் நீ
நிற்கவேண்டாம்.

19. காணாதவார்த்தை தனைக்
கட்டுரைக்கவேண்டாம்.

20. புண்படவே வார்த்தைதனைச்
சொல்லவேண்டாம்.

21. வாதாடி வழக்குரைத்துச்
செல்லவேண்டாம்.

22. திறம் பேசிக் கலகமிட்டுத்
திரியவேண்டாம்.

23. இறந்தாலும் பொய் தன்னைச்
சொல்லவேண்டாம்.

24. தெய்வத்தை ஒரு நாளும்
மறக்கவேண்டாம்.

---

# புதிய
# மூன்றாம் பாட புத்தகம்.






மதுரைத் தமிழ்ச்சங்கத்து அங்கத்தினருள் ஒருவரும்,

புத்தக வர்த்தகருமாகிய,

இ. மா. கோபாலகிருஷ்ணக் கோன்,

வெளியிட்டது.

ரிஜிஸ்தர் செய்தது.] 1951 [விலை அணா 0-6-0.

# முகவுரை

இப்புத்தகத்தில் அமைந்துள்ள பாடங்கள் வித்தியா விசாரணை அதிகாரிகளின் விதிகளை அநுசரித்துப் புதிய முறைக்குப் பொருத்தமாயும், நம் தாய் மொழியாகிய தமிழ்ப் பாஷையைக் கற்கும் மாணவர் தக்க வழியிற் கற்று, மிக்க பயன் பெறுமாறும் எழுதப்பெற்றுள்ளன.

2. தொடர் முறைப் போதனைக்கும் பொருந்தியுள்ளன.

3. பாடங்கள் பெரும்பான்மை பொருட்பாட சம்பந்தமாகவும், நீதிக்கதை சம்பந்தமாகவும் சிறு பான்மை பாட்டுக்களாகவும் தொகுக்கப் பெற்றுள்ளன.

4. நீதிபோத சம்பந்தமான பாடங்கள் சிறுவர்கள் மனவெறுப்பு அடையாமல், உற்சாகத்துடன் படிக்குமாறு வேடிக்கையானதும், விளையாட்டானதுமான கதைகளாக எழுதப்பெற்றுள்ளன.

5. முதலில் தெய்வ வணக்கப் பாடல்களும், ராஜ வணக்கப் பாடல்களும் கதாசம்பந்தமான பாடல்களும் சேர்க்கப்பட்டுள்ளன' இவை 'சிறுவர் மனதில் நன்கு பதிந்தால் பருவ காலத்தில் தெய்வ பத்தி, நன்னெறி அபிவிருத்தியாகி, நலம் பெறுவார்கள்' என்னும் நன் நோக்கத்தோடு எழுதப் பெற்றுள்ளன,

6. சில பாடங்கள் மாணவரைக் கொண்டு நாடகமாக நடத்துதற்கேற்றவாறு நன்கு அமைந்துள்ளன.

7. இப்புத்தகத்தைக் கண்ணுறும் போதனை ஆசிரியர்கள் இதனை நன்கு ஆதரிப்பார்கள் என்று நம்புகிறேன்.

நூலாசிரியன்.

# கடவுள் துதி.

---

"தலையே நீ வணங்காய்" என்ற பாடலின் சந்தம்

---

ஆதிபரம் பொருளே-முதல்
ஆதாரமாம் பொருளே
அங்கும் இங்கும் எங்கும் தங்கும் (ஆ)

சோதி சுயம் பொருளே-நல்ல
தூய பரம் பொருளே
கத்தா மூத்தா அத்தா நித்தா (சோ)

பணிவோம் நின்பதமே-சிறு
பாலரனு தினமே
பகரும் கல்வி ஞானந் தரவே (ப)

அகிலம் துதி பொருளே-வளர்
அன்புருவே அமுதே
அன்னை தந்தை யாவும் நீயே (அ)

வற்றாத பாக்கியமே-பெற
வாழ்த்தி வணங்குவமே
மக்களுக்கே இக்கணமருள் (வ)

# பொருள் அடக்கம்

# புதிய

# மூன்றும் பாட புத்தகம்.



## 1. மாதா, பிதா, குரு, தெய்வம்.

1. மனம் மகிழ்வுடன் பத்துமாதம் நம்மைச் சுமந்து பெற்றவள் நமது தாய். பால் ஊட்டி, சீராட்டி, பக்குவமாய் வளர்த்தவளும் நமது மாதா.

2. அன்புடன் நற்புத்தி புகட்டி, நல்ல வழியில் நம்மை நடத்தி வருபவர் நமது பிதா.

துஷ்டருடைய சிநேகம் துன்பம் தருமென்று கண்டித்துக் காப்பவரும் நமது தந்தை. நாம் நல்வழியில் நடப்பதும் நன்ருகப் படிப்பதும் அவருக்குப் பிரியம்.

3. இளமைப் பருவத்தில் நமக்கு நாள் தோறும் கல்வியை நலமாய்ப் போதிப்பவர் நமது குரு.

4. நம்மையும், நாம் பார்க்கும் எல்லா வஸ்துக்களையும் படைத்தவர் கடவுள். உலகத்தில் உள்ள எல்லா ஜீவராசிகளையும் காப்பவர் கடவுள். அவர் எங்கும் நிறைந்தவர். எல்லாம் அறிந்தவர். அவருக்குத் தெரியாமல், நாம் ஒன்றும் செய்ய முடியாது. ஆதியும், அந்தமும் அவருக்கு இல்லை.

5. நாம் துஷ்டருடன் கூடி, கெட்ட காரியங்கள் செய்தால், அவருக்கு நம்மிடம் வெறுப்பு உண்டாகும். நாம் நல்லவரோடு சேருவதும், நல்ல வழியில் நடப்பதும் அவருக்குப் பிரியம். அவருக்கு விருப்பமாக நடந்து கொள்வதே நமது கடமை.

6. நாம் எப்பொழுதும் கடவுளைத் துதித்து வணங்க வேண்டும். தம்மை வணங்கினவருக்கு அவர் நன்மை செய்வார்.

கடவுளை நம்பினேர் கைவிடப்படார்.



## 2. வாசிக்கும் முறை

மாணவர்களே, நீங்கள் பாடப் புத்தகம் வாசிக்கும் முறையைக் கூறுகிறேன் கவனியுங்கள்.

நீங்கள் பாடம் வாசிக்கும்போது உங்களுடைய உடல் நிமிர்ந்து இருக்க வேண்டும்; வளைந்தும் சோர்ந்தும் இருக்கக் கூடாது; புத்தகத்தை இடதுகையால் பிடித்து, மார்புக்கு நேராக வைத்துக்கொள்ள வேண்டும்; மேலே உயர்த்தியும், கீழே தாழ்த்தியும் புத்தகத்தைப் பிடிக்கக் கூடாது.

உபாத்தியாயருக்கும், மற்ற மாணவர்களுக்கும் நன்றாய்க் கேட்கும்படி நீங்கள் தெளிவாக

வும், பிழையின்றியும் வாசிக்க வேண்டும்; வார்த்தைகளை நன்றாய் உச்சரிக்க வேண்டும்; வாசிக்கும் பொருளைத் தெரிந்துகொண்டு வாசிப்பது அவசியம். நீங்கள் பொருள்களைத் தெரிந்துகொள்வது போலக் கேட்பவர்களுக்கும் பொருள் விளங்கும்படி நிறுத்தி வாசிக்கவேண்டும். நீங்கள் வாசிப்பதானது பிறரோடு பேசுவது போல இருக்க வேண்டும்.

ஆச்சரியமான விஷயத்தை நீங்கள் வாசிக்கும்போது, கேட்பவர் ஆச்சரியப் படும்படி வாசிக்க வேண்டும். கேள்விகளை வாசிக்கும் போது, அக்கேள்விகளை நீங்கள் கேட்பது போல இருக்கவேண்டும்.

இராகம் போட்டு வாசிப்பதும், விரைவாக வாசிப்பதும், அதிகச் சத்தமிட்டு வாசிப்பதும், தாழ்ந்த குரலில் வாசிப்பதும் கூடாது.

உபாத்தியாயர் வாசித்துக் காட்டும்போதும், விஷயங்களைச் சொல்லும்போதும் நீங்கள் நன்றாய்க் கவனித்துக் கேட்க வேண்டும். உங்களுக்குத் தெரியாத விஷயங்களை, உபாத்தியாயரிடம் அடிக்கடி கேட்டுத் தெரிந்துகொள்ள வேண்டும். உபாத்தியாயர் வாசிக்கும்போதும், சொல்லும்போதும் உங்கள் கவனத்தை வேறு இடத்தில் செலுத்தக்கூடாது. அவ்வாறு கவ

னித்துக் கேட்பீர்களானல் நீங்கள் கல்வி கற்கும் முறையை நன்ருய் அறிந்து கொள்வீர்கள்.

---

வாசிக்கும் முறை; பாட்டு.

“ஆதி சிதம்பரத்தைக் கிளியே அடிவணங்கிக்கொள்ளு”

என்ற சந்தம்.

---

1. மாணவரே உமக்குப்—பாடம்
வாசிக்கும் நல்முறையைப்
பேணியே கூறிடுவேன்—கேட்பீர்
பேசுவது போல;

2. பாடம் படிக்கவேண்டும்—இடக்கை
பற்றிய புத்தகத்தை
நாடியே மார்புக்குநேர்—அமைய
நன்கு பிடிக்கவேண்டும்;

3. வார்த்தைகளைத் தனியாய்ப்—பார்த்து
வாசிக்கும் போதினிலே
நேர்த்தியாய் அப்பொருளை—உங்கள்
நெஞ்சிலிருத்த வேண்டும்;

4. ஆச்சரிய விஷயம்—கேள்வி
ஆன விதங்களெல்லாம்
பேச்சில் துலங்கும்படி—உணர்வு
பெற்றுப் படிக்க வேண்டும்;

5. இராகமும் கூடாது—அதிக
இரைச்சலும் ஆகாது
வேகமும் கூடாது—நிறுத்தி
மெல்லப் படிக்க வேண்டும்;

6. உபாத்தியாய ருமக்குச்—சொல்வதை
உற்றுணர்ந்து கருத்தாய்
அவ்வா வுடனேகேட்டு—மனதில்
ஆழப் பதிக்க வேண்டும்;

7. அடிக்கடி உபாத்தியாயரைக்—கேட்டு
அறிவது குற்ற மல்ல
படிப்பதுபோல் ஒழுக்கம்—ஒன்றும்
பற்றிப் பழக வேண்டும்;

8. பாடசாலை வகுப்பில்—நித்தம்
பாடம் படிப்பதுபோல்
நாடியே வீட்டினிலும்—படிக்க
நன்கு பழக வேண்டும்;

9. பயன்தரு மிந்தமுறை—கல்விப்
பாலர்களே நீங்கள்
முயன்று படித்துவந்தால்—நல்ல
முன்னேற்றம் பெற்றிடலாம்.

---

# 3. கிளி



1. பிள்ளைகளே! சில வீடுகளில் கிளி வளர்த்துவருவதைப் பார்த் திருப்பீர்கள். கிளி வீட்டில் வளர்ந் தாலும், அது வீட்டுப் பக்ஷி அல்ல, காட்டுப் பக்ஷியே. காடுகளில் அது தன் இஷ்டம் போல் பறந்து திரியும்.

2. சிறு குஞ்சாக இருக்கும்போது, அதை எடுத்து வளர்ப்பதும் உண்டு. அது பெரிதானால் காட்டுக்குப் பறந்து போய்விடும். அப்படிப் பறந்து போய் விடாமலும், பூனை முதலிய பிரா ணிகள் அதைப் பிடித்துத் தின்றுவிடாமலும் காப்பதற்கு அதைக் கூண்டில் வளர்க்கிறார்கள்.

3. பறவைகளில் கிளி மிகவும் அழகானது. கிளிகளில் பச்சைக்கிளி, வெள்ளைக்கிளி, பஞ்ச வர்ணக்கிளி எனப் பலவகை உண்டு.

4. பஞ்சவர்ணக் கிளியின் இறகுகளில் பச்சை, சிவப்பு, மஞ்சள், நீலம், வெண்மை ஆகிய ஐந்து நிறங்களும் காணப்படும். இது பார்ப்பதற்கு அதிக அழகாய் இருக்கும்.

5. பச்சைக்கிளியின் இறகுகள் பசுமை நிற மானவை; அலகு சிவப்பு நிறம். அதன் கழுத்தில் கருமை நிறமான ஒரு கோடு உண்டு.



6. இதோ பார் வெள்ளைக் கிளியின் படம். அதன் இறகுகள் வெண்மை நிறமானவை; உடல் பெரிதாயிருக்கும்; அலகு கறுப்பு நிறம். கிளிகளில் இதற்கு மட்டும் தலையில் ஒரு கொண்டை உண்டு.

7. கிளியின் அலகுகளில், மேல் அலகு வளைந்து உறுதியாயிருக்கும் கீழ் அலகு மேல் அலகைவிடக் குட்டையானது. இவ்வலகினுல் அது உறுதியான கொட்டைகளையும் நொறுக்கித் தின்னும். பழங்களும் விதைகளும் அதற்கு முக்கிய உணவு.

8. காடுகளில் கிளிகள் கூட்டம் கூட்டமாய்ப் பறக்கும்; ஆனல் மற்ற பறவைகளைப் போல அதிக உயரம் பறக்கமாட்டா. கிளிகள் கூடுகட்டி வசிப்பதில்லை; மரப் பொந்துகளில் முட்டையிட்டுக் குஞ்சு பொரிக்கும்.

9. கிளியைப் பேசப் பழக்கலாம். கிளி சொன்னதைச் சொல்லும். அதைத் தவிர அதற்கு ஒன்றும் பேசத் தெரியாது. பேசுவதின் அர்த்தமும் இது அறியாது.

சொன்னதைச் சொல்லும் கிளிப்பிள்ளை.



# 4. வேப்ப மரம்

1. வேப்பமரம் உஷ்ணதேசங்களில் அதிகமாய் வளரும். இது விதையிலிருந்து உற்பத்தியாகிறது. சில இடங்களில் விதைகள் விழுந்து தானுக முளைப்பதும் உண்டு. சிலர் விதைகளை நட்டுப் பயிர் செய்வதும் உண்டு. ஈரமுள்ள இடங்களில் இது செழிப்பாய் வளரும். சில வருஷங்களுக்குள் பெரிய மரமாகும்.

2. இதன் வேர்கள் பூமிக்குள் வெகு ஆழமாய்ப் படர்ந்து செல்லும். அவை, மரம் விழுந்து விடாமல் உறுதியாய்ப் பிடித்துக் கொண் டிருக்கின்றன. மரத்துக்கு வேண்டிய உணவையும் அவை தருகின்றன.

3. வேருக்கு மேல் வெளியில் தெரியும் பாகத்திற்கு அடிமரம் என்று பெயர். அடிமரத்தின் வெளிப்புறம் கனத்த பட்டைகளால் மூடப்பட்டு இருக்கிறது. பட்டையின் மேல் பக்கம் மிகவும் கரடு முரடாகவும், கறுப்பாகவுமிருக்கும்.

4. அடிமரத்திற்கு மேல் கிளைகள் பரவி வளர்ந்திருப்பதைப் பார். கிளைகளில் பசுமையான இலைகள் நிறைந்திருக்கின்றன. இலைகளின் ஓரம் சிறு ரம்பத்தின் பற்களைப்போல் இருக்கும். இவை குளிர்ந்த நிழலைக் கொடுக்கும்.

5. வேப்பங்காற்று, வியாதிகளை நீக்கும்; தேகத்திற்குச் சுகத்தைத் தரக்கூடியது, ஆதலால் வேப்பிலையைக் குழந்தை பிறந்த வீடுகளிலும், வைசூரி வார்த்த வீடுகளிலும் வாசலில் கட்டி வைப்பார்கள். வேப்பங்கொழுந்து குழந்தைகளுக்கு மருந்தாக உதவும்.

6. இலைகளின் இடையே சிறு கிளைகளில் வெண்ணிறமான பூங் கொத்துகள் தொங்கிக் கொண்டு இருப்பதைப் பார். வேப்பம்பூ வாசனையுள்ளது.

7. பூ, முதிர்ந்தபின் காயாகும். காய் பச்சை நிறமானது. காய்கள் முட்டை வடிவமாய் இருக்கும். காயைத் தின்றால் கசக்கும். மேல் தோலை உரித்தால் வெண்ணிறமான பால் வரும். உள்ளே கொட்டை உண்டு. காய் முற்றிப் பழமான பின், பால் வற்றிப்போகும். பழம் மஞ்சள் நிறமானது; கொஞ்சம் இனிப்பாய் இருக்கும்.

8. பழங்களைப் பொறுக்கிக்கொட்டைகளை வேருக எடுப்பார்கள். கொட்டைக்கு வேப்ப முத்து என்று பெயர். வேப்ப முத்தில் இருந்து நெய் எடுப்பார்கள். வேப்ப நெய் மருந்தாக உபயோகப்படுகிறது. வேப்பம் பிண்ணுக்கு மருந்தாகவும், வயலுக்கு உரமாகவும் உபயோகமாகும். வீடுகளுக்கு அருகில் வேப்பமரத்தை வைத்து வளர்ப்பது நல்லது.

## 5. கோழி.

1. வீடுகளில் கோழிகள் திரிவதை நீங்கள் பார்த்திருப்பீர்கள். படத்தில் கோழியும், சேவலும் நிற்கின்றன, அவைகளில் ஒன்று உயரமாய் நிமிர்ந்து நிற்கிறது பார். அதன் தலையில் ஒரு கொண்டை இருக்கிறது. அதன் அலகின் கீழ் வட்டமான சதை வளர்ந்து தொங்குகிறது. அது சிவப்பு நிறமானது. அதன் வால் இறகு, நீண்டு வளைந்து அழகாயிருக்கிறது. அது தான் ஆண் கோழி. ஆண்கோழிக்குச் சேவல் என்று பெயர்.

2. சேவலின் பக்கத்தில் நிற்பது பெட்டைக்கோழி. பெட்டைக்கோழி சேவலைவிடக் குட்டையானது. இவைகளின் கால்களும். அலகுகளும் உறுதியானவை. ஒவ்வொரு காலிலும் முன்புறம் மூன்று விரல்களும், பின்புறம் ஒரு விரலும் இருக்கின்றன.



3. சேவலினுடைய காலின் பின் பக்கத்து விரலுக்கு மேல் ஒரு நகம் இருக்கிறது பார். இதற்கு முள் என்று பெயர். இது சேவலுக்குச் சரியான பருவம் வந்தபின் முளைக்கும். முள் அதிக உறுதியாயும், கூர்மையாயும் இருக்கும்.

4. இவற்றின் இறகுகள் குட்டையானவை. ஆகையால் இவை உயரமாய்ப் பறப்பதில்லை. இவைகளுக்குக் காதுகள் உண்டு. காதுகள் உரோமத்தால் மூடப்பட்டிருக்கின்றன.

5. இவை குப்பைகளை விரல்களால் கிளறி இரை பொறுக்கும். தவிடு, தானியம், பூச்சி, புழு முதலியவற்றை, இவை பிரியமாய்த் தின்னும். மென்று தின்னப் பற்கள் இல்லாததால் இவை இரையை அப்படியே விழுங்கிவிடும்.

6. பெட்டைக்கோழி ஒரு தடவையில் 10 முதல் 20 முட்டைகள் வரை இடும்; முட்டையிட்டு ஓய்ந்தபின் மூன்று வாரம் வரை அடைகாக்கும். முட்டைகளின் மீது இருந்து தன்சிறகுகளால் அவைகளை அணைத்து, சூடு கொடுப்பதுதான் அடைகாத்தல். பிறகு முட்டையின் மீதுள்ள ஓடு உடைந்து குஞ்சு வெளிப்படும்.



7. முட்டையில் இருந்து குஞ்சு வெளிவருவதைப்பார். இதன் உடலில் இறகுகள் இல்லை. குஞ்சு வளர வளர இறகுகள் முளைக்கும் முட்டையிலிருந்து வெளி வந்தவுடன் குஞ்சு தானாக இரை பொறுக்கும்.

8. தாய்க்கோழி தன் குஞ்சுகளைப் பத்திரமாய்க் காக்கும்; அதற்கு இரை கிடைக்கும் போது, கொக்கரித்துக் குஞ்சுகளைக் கூப்பிடும். குஞ்சுகளும் தாயின் சத்தத்தைக்கேட்டு நெருங்கி ஓடி இரைகளைப் பொறுக்கும். பருந்து, காகம் முதலிய பட்சிகளைக் கண்டால் தாய்க்கோழி வேறு விதமாய்ச் சத்தமிடும். அப்போழுது குஞ்சுகள் ஓடிவந்து, தாயின் இறக்கைக்குள் மறைந்து கொள்ளும். இவை மாலை நேரத்தில் கூடுகளில் அடையும். சேவல் அதிகாலையில் கூவும்.

9. கோழியின் முட்டையையும், மாமிசத்தையும் சிலர் புசிப்பார்கள்; இதற்காகவே இதை வீட்டில் வளர்க்கிறார்கள். சிலசமயங்களில் மருந்துக்காக முட்டைகளை உபயோகிப்பதும் உண்டு.



# 6. ஆடுகள்

மக:-அப்பா! ஆட்டுமந்தையில் கூட்டமாய் நிற்கும் ஆடுகள் ஒரேமாதிரியாய் இல்லையேஏன்?

தக:-குழந்தாய்! ஆடுகளில் வெள்ளாடு, செம்மறியாடு, குறும்பையாடு எனப் பலவகை உண்டு. இவைகளில் ஆண் ஆட்டுக்குக் கடா என்றும், பெண் ஆட்டுக்கு மறி என்றும் பெயர்.

இதோ பார் இதுதான் வெள்ளாடு. இதன் உடம்பு முழுதும் கருமை நிறமான உரோமங்கள் அடர்ந்து இருக்கின்றன. இதன் கொம்புகள் நேராகவும்பின் புறம் சாய்ந்தும் இருக்கின்றன. இதுஉயரமாயுள்ளது



ஆண் ஆட்டுக்குத் தாடையில் ரோமம் நீண்டு

தொங்கும். இதில் மற்றொருவகை உண்டு. அது குட்டையா யிருக்கும். அதற்குப் பள்ளையாடு என்று பெயர். இது கறுப்பு நிறமா யிருந்தும் இதற்கு வெள்ளாடு என்று பெயர் வழங்குகிறது.



இது செம்மறியாடு. அதன் உரோமங்கள் மங்கின செந்நிற மானவை. வெள்ளாட்டைவிட இதன் உரோமங்கள் அடர்த்தி யாய் இருக்கும். இதன் கொம்பு கள் திருகலாயும் வளைந்தும் இருக்கின்றன. இதில் பெண் ஆட்டுக்குப் பெரும் பாலும் கொம்புகள் வளர்வதில்லை.



இதோ பார்! குறும்பையாடு. இதன் மயிர்கள் வெண்மை நிற மானவை. மற்ற ஆடுகளைவிட இதன் உரோமங்கள் அதிக நெருக்கமாய் நீண்டு வளர்ந்து தொங்குகின்றன. இதற்குக் கொம்புகள் இல்லை. செம் மறியாடும், குறும்பையாடும் குட்டையானவை.

மக:-அப்பா! ஆட்டின் உரோமம் அடர்த்தி யாயும், நீளமாயும் ஏன் வளர்ந்திருக்கிறது?

தக:-மகனே! குளிர் காலத்தில் அதற்குப் போர்வையாய் உதவ, அவ்வாறு வளர்ந்திருக் கிறது. கோடைகாலத்தில் இந்த உரோமங்கள் உதிர்ந்துவிடும். உதிர்ந்துவீணாகாதபடி ஆட்டை வளர்ப்பவர்கள் அவற்றைக் கோடைகாலத்தில் கத்தரித்து எடுத்துக் கொள்வார்கள். மறுபடியும் அவை குளிர் காலத்திற்குள் வளர்ந்து விடும்.

மக:-அப்பா! ஆடுகளுக்கு ஆகாரம் என்ன?

தக:-பிள்ளாய்! ஆடுகள் புல் பூண்டுகளைத் தின்னும். வெள்ளாட்டுக்கு இலை, தழைகள்பிரிய மான உணவு. ஆனால் ஆடுதின்னாப்பாளை என்ற இலைகளை மாத்திரம் தின்னமாட்டா.

மக:-ஆம் அப்பா! ஆடுகள் உணவுதின்னாத போது கூட வாயை அசைக்கிறதே! அது ஏன்?

தக:-ஆட்டின் மேல்வாயில் பற்கள் இல்லை. அவற்றிற்குப் பதிலாகச் சொற சொறப்பும் உறுதியுமான ஈறு வளர்ந்து இருக்கிறது. கீழ் வாயில் மட்டும்பற்கள் உண்டு. கீழ்வாய், மேலும் கீழும் அசைவதோடு பக்கத்துக்குப் பக்கமும் அசையும். ஆடு புல்லைமேய்ந்து இரைப்பையில் ஆகாரத்தைச் சேகரிக்கும். மறுபடியும் வாயினுள் இழுத்துக் கடைவாய்ப்பற்களால் மென்று விழுங்கும். இதற்குத்தான் 'அசை போடுதல்' என்று சொல்லுவது.

மக:-அப்பா! ஆட்டினால் நமக்கு என்ன உபயோகம்?

தக:-கண்மணி! ஆட்டின்பால் நமது தேகத்துக்கு ஆரோக்கியமானது. அதன் உரோமத்தால் போர்வை, கம்பளம் நெய்வார்கள். அதன் தோல் பதனிடப்பட்டு, பலவித சாமான்களாகச் செய்யப்படுகிறது. ஆட்டின் மாமிசத்தைப் பலர் புசிக்கிறார்கள். ஆட்டுச்சாணம், மூத்திரம் இவை பயிர்களுக்கு நல்ல உரயாகும். இதற்காக ஆட்டு மந்தையை வயல்களில் நிறுத்தி வைப்பது உண்டு. அதற்கு ஆட்டுக்கிடை என்று பெயர்.



## 7. தென்னைமரமும், பனைமரமும்

1. இந்தப் படத்தில் தென்னைமரமும், பனைமரமும் இருக்கின்றன. இவை ஒரே இனத்தைச் சேர்ந்தவை. பெரும்பாலும் மணற்பாங்கான இடங்களில் இவை நன்றாய் வளர்கின்றன.

2. இவை அதிக உயரமாய் வளரும். அடி பெருத்தும், நுனி சிறுத்தும் இருக்கும். இவைகளுக்கு மற்ற மரங்களைப்போல் கிளைகள் இல்லை.

3. ஆனால் இவற்றின் உச்சியில் மட்டைகள் அடர்ந்து இருக்கும். தென்னை மட்டைகள் முதிர்ந்த பின் உதிர்ந்துவிடும். பனைமட்டைகள் காய்ந்து தொங்கும். அவை தென்னை மட்டைகளைப்போல் அதிகமாக உதிர்வதில்லை. ஆகையால் அவைகளை வெட்டிவிடுவார்கள்.

4. தென்னை மட்டைகள் நீளமானவை. மட்டைகளின் இருபுறங்களிலும் ஓலைகள் தனித் தனியாய் நீண்டு வளர்ந்திருக்கும். தென்னை ஓலைகளைக் கீற்றுகளாக முடைந்து வீட்டின் கூரையாக வேயவும், பந்தல் போடவும் உபயோகிக்கிறார்கள். விசிறியும் செய்வதுஉண்டு.

5. பனைமட்டைகள் குட்டையானவை மட்டைகளின் இருபுறங்களிலும் கூரான கருக்குகள் உண்டு. ஓலைகள் ஒன்றோடு ஒன்று சேர்ந்து இருக்கும். பனை ஓலைகளை வீடு வேயவும், விசிறிகள் செய்யவும், கணக்குகள் எழுதவும் உபயோகிக்கிறார்கள். பனைநாரினாலும், ஓலைகளினாலும் பெட்டிகளும், பாய்களும் பின்னுகிறார்கள்.

6. மட்டைகளின் இடையே பாளைகள் உண்டாகும். பாளையைப் பக்குவப்படுத்தி, நுனியைச் சீவினால் கள் வடியும். பாளையில் தொங்கவிட்டிருக்கும் கலயத்தில் கள்ளை இறக்குவார்கள்.

7. சிலர் கலயங்களில் உள்ளே சுண்ணாம்பைத் தடவிக் கட்டுவார்கள். அதில் விழும் துளிகள் பதனியாகும். இது குடிக்க இனிப்பாயிருக்கும். பதனியைக் காய்ச்சி வெல்லமும், கற்கண்டும் செய்வார்கள்.

8. பாளையிலிருந்து பூ வெளியாகும். பூக்களிலிருந்து காய்கள் குலை குலையாய்க் காய்க்கும்.

9. தென்னைமரத்தின் இளங்காய்க்கு இளநீர் என்று பெயர். இதில் நிறைய ஜலம் உண்டு; இது குடிப்பதற்கு இனிப்பாய் இருக்கும்.

முற்றின காய்க்குத் தேங்காய் என்று பெயர். இதன் உள்ளே காணப்படும் பருப்பு வெள்ளை நிறமானது. இது தின்னவும், சமைக்கவும், எண்ணெய் எடுக்கவும் உபயோகமானது.

10. பனங்காய் கறுப்பு நிறமாய் இருக்கும். காயை வெட்டி நொங்கு எடுப்பார்கள். இது சாப்பிட மிகவும் சுவையாய் இருக்கும். பனங்காய் முற்றினல் பழமாகும். பனம்பழம் சாப்பிட இனிப்பாய் இருக்கும்.

11. இவைகளின் உபயோகம் இன்னும் பல உள்ளன. தென்னைமரம் ஐந்தாறு வருடங்களில் பலன் தரும். பனைமரம் பலன்தரப் பல வருடங்கள் செல்லும்.

## 8. இந்திய நாணயங்கள்




1. இது ஒரு பை. இதைச் சல்லி, தம்பிடி, காசு, கால் துட்டு என்று வழங்குவதும் உண்டு.



2 இது வட்டவடிவமானது; செம்பினல் செய்யப்பட்டது. இதன் ஒரு பாகத்தில், நமது அரசரின் உருவமும், மற்றொரு பக்கத்தில் கொடிபோன்ற சித்திரமும், இதன் மதிப்பும் போடப்பட்டிருக்கின்றன.

3. இது போன்ற மூன்று பைசாக்கள் சேர்ந்தது காலணு.




இதுதான் காலணுவின் உருவம் இதுவும் செம்பினுல் செய்யப் பட்டு வட்ட வடிவமாய் உள்ளது.

4. பன்னிரண்டு பைசாக்கள் அல்லது நான்கு காலணுக்கள் சேர்ந்தது ஒரு அணு.



இதோ பார்! இது அணுவின் படம்; நிக்கல் என்ற கலவை உலோகத்தில் செய்யப்பட்டது. இதன் விளிம்பு பல வளைவுகள் உள்ளது. இதை வீசம், அல்லது மாகாணி ரூபாய் என்றும் சொல்வது உண்டு.

5. இது இரண்டணுவின் உருவம். இதுவும் நிக்கல் உலோகத்தால் செய்யப்பட்டது; சதுர வடிவமானது. இதற்கு அரைக்கால் ரூபாய் என்றும் பெயர் உண்டு.





6. இதுவும் இரண்டணுதான். இது வெள்ளியினுல் செய்யப் பட்டது; வட்ட வடிவமானது.





7. இதோ பார்! நாலணுவின் படம். இது நிக்கலால் செய்யப்பட்டது. இதற்குக் கால் ரூபாய் என்றும் பெயர்.




8. இது வெள்ளியினுல் செய்யப்பட்ட நாலணு, அல்லது கால் ரூபாய்.




9. இது நிக்கலால் செய்யப்பட்ட எட்டணுவின் படம். இதற்கு அரை ரூபாய் என்றும் பெயர்.




10. இது வெள்ளியினுல் செய்யப்பட்ட எட்டணு, அல்லது அரை ரூபாயாகும்.




11. இதோ காண்பது ஒரு ரூபாயின் படம். இது வெள்ளியினுலேயே செய்யப்பட்டது.



12. தங்க நாணயம் ஒன்று உண்டு பசாக்கள் ரூப் பவுன் அல்லது ஸவரன் என்று இவை நமது தேசத்தில் வழங்கிவரும் நா யங்கள்.



## 9. வாத்து

1. வாத்து, பறவை இனத்தைச்சேர்ந்தது. இதில் குள்ளவாத்து, பெரியவாத்து, காட்டு வாத்து எனப் பலவகை உண்டு. இவை நீரில் வாழும் ஜெந்துக்கள்.

2. குள்ளவாத்தும், பெரியவாத்தும் தரை யிலும் நடமாடும். காட்டுவாத்து, உயரப் பறக் கும்; தரையில் உலாவித் திரியாது.

3. வாத்தின் அலகுகள் அகன்று நீண்டு தட்டையாயும், சப்பட்டையாயு மிருக்கும். அத